# பொருளடக்கம்

## 1. கத்தோலிக்க இல்லம்!

இந்த நூற்றாண்டின் துவக்கத்தில், தென் அமெரிக்கக் குருவானவரான சங்.மாத்தியோ சுவாமி (Mateo) அகில உலகம் தழுவிய ஒரு இயக்கத்தைத் துவக்கினார். அது பெருமளவு வெற்றியும் பெற்றது. அவர், அர்ச். 10-ம் பத்திநாதர் பாப்பரசரின் ஆசீர்வாதத்தைப் பெற்றுக் கொண்டதும் அல்லாமல், இந்த இயக்கத்திற்காக அவரது வாழ்வைச் செலவிட வேண்டுமென்று, பாப்பரசரால் கேட்டுக் கொள்ளவும்பட்டார்.

முன்பு, பரலேமோனியலில் அர்ச். மார்க்ரீத் மரியம்மாளுக்குக் காட்சி அளித்த நமது ஆண்டவர், ”எனது திரு இருதயத்தின் சாயலை ஸ்தாபித்து சங்கை செய்யும் ஒவ்வொரு இல்லத்தையும் நான் ஆசீர்வதிப்பேன்” என்று உறுதியளித்தார். சங். மாத்தியோ சுவாமியின் இயக்கம், உலகம் முழுவதிலும் சேசு கிறீஸ்துவின் சமூக ஆட்சி (ராஜரீகம்) மீண்டும் நிறுவப் படுவதைக் குறிக்கோளாகக் கொண்டு துவக்கப்பட்டது.

சமுதாயத்தைக் கிறீஸ்தவ மயமாக்க வேண்டுமென்றால், முதலில் ஒவ்வொருக் குடும்பத்தையும் கிறிஸ்தவமயமாக்க வேண்டுமென்பதை அறிந்திருந்த இந்த ஆன்மதாகம் மிகுந்த குருவானவர் சேசுவின் திரு இருதயத்திற்கு ஆன்மாக்களைக் கவர்ந்து கொண்டுவர, இல்லங்களில் அன்பின் அரசரின் அரசாட்சியை ஸ்தாபிக்க முயன்றார்.

இந்த அழகியக் கத்தோலிக்கப் பக்தி முயற்சியைப் பற்றி நீங்கள் ஏற்கனவே அறிந்திருப்பீர்கள். அதோடு உங்களில் அநேக இல்லங்களில் சேசுவின் திருஇருதயத்தின் அரசாட்சியை ஸ்தாபித்து இருப்பீர்கள். நல்லது! இங்கே நாம் பின்வரும் கேள்விக்கான பதிலைப் பெற்றுக் கொள்வதாகத் தோன்றுகிறது.

எப்போது ஒரு வீட்டில் கத்தோலிக்கச் சூழ்நிலை ஏற்படும்? மெய்யான தேவனும் மெய்யான மனிதனுமானவரான நமது ஆண்டவரின் அரசாட்சியின் கீழ் அவ்வீட்டின் அனைத்தும் உட்படும் போது. நான் அனைத்தும் என்று கூறுவது, நமது ஜெபதவங்களை மட்டுமல்ல, மாறாக,

நமது பொழுது போக்குகள், நமது உணவுகள், நமது உடையணிகள், நமது பேச்சுக்கள் போன்றவற்றையும் சேர்த்து தான் குறிப்பிடுகிறேன்.

சேசுவின் திரு இருதய ”அரசாட்சியை ஸ்தாபிப்பது” என்பது வெறுமனே ஒரு படத்தை மந்திரிப்பதோ அல்லது ஒரு அர்ப்பண ஜெபத்தை வாசிப்பதோ அல்ல. மாறாக, அது சேசுவின் திருஇருதயத்திற்காக அன்பின் வாழ்வாகிய ஒரு புதுவாழ்வுக்குத் துவக்கமாகவே இருக்கிறது.

சேசுவின் திருஇருதய “அரசாட்சியை ஸ்தாபிப்பது” என்பது வெறுமனே ஒரு படத்தை மந்திரிப்பதோ அல்லது ஒரு அர்ப்பண ஜெபத்தை வாசிப்பதோ அல்ல. மாறாக, அது சேசுவின் திரு இருதயத்திற்காக அன்பின் வாழ்வாகிய ஒரு புதுவாழ்வுக்குத் துவக்கமாகவே இருக்கிறது. சேசுகிறீஸ்து அந்தக் குடும்பத்தின் அரசர். அவ்வாறே அவர் சங்கை செய்யப்பட வேண்டும்.

இல்லங்களில் சேசுவின் திருஇருதய சமூக அரசாட்சி - கத்தோலிக்கச் சூழ் நிலை அதன் உறுப்பினர்களுடைய அர்ச்சிஷ்டத்தனம் - அவர்களது நித்திய இரட்சணியம் - அதனால் மகா பரிசுத்தத் தமத் திரித்துவத் தின் மகிமை ஆகிய இவை அனைத்துமே ஒன்றோடொன்று பிணைக்கப் பட்டிருக்கிறது. அது எப்படியென்பதைப் பார்ப்போம்.

கிறிஸ்துநாதரின ஞான சரீரமாகிய திருச்சபையின் சிரசான சேசுநாதர், சர்வேசுவரனுக்கும் மனிதருக்கும் மத்தியஸ்தராக இருக்கிறார். மடாதிபதியான மார்மியான் சுவாமியின் அழகிய புத்தகங்கள் விளக்குவது போல, சேசுகிறிஸ்து வழியாக நாம் சர்வேசுவரனின் சுவீகார மக்களாக இருக்கிறோம்

அர்ச். சின்னப்பர்: ”நீங்கள் மிகவும் பிரியமானப் பிள்ளைகளைப் போல், சர்வேசுவரனைப் பின்பற்றுகிறவர்களாயிருந்து கிறீஸ்துநாதர்... நம்மை சிநேகிப்பது போல் நீங்களும் சிநேகத்தில் நடந்து வருவீர்களாக... முன்பு நீங்கள் இருளாயிருந்தீர்கள். இப்பொழுதோ கர்த்தருக்குள் ஒளியா யிருக்கிறீர்கள். ஒளியின் புத்திரராக நடந்து கொள்ளுங்கள். ஒளியின் கனியோ சகலவித நன்மைத்தனத்திலும், நீதியிலும், சத்தியத்திலும் விளங்குகிறது” (எபேசி. 5:1-2,8-9) என்று கூறுகிறார். நம்மைச்

சுற்றிலுமுள்ள கடவுளற்ற நாத்தீக உலகம் ஒரு பயங்கர இருளில் மூழ்கியுள்ளது.

கத்தோலிக்கக் குடும்பங்கள், உண்மையானக் கிறீஸ்தவ அன்பு அனுசரிக்கப்படுவதின் மூலம் சேசுவின் திருஇருதயத்துக்கு ஆறுதலும், இளைப்பாற்றியும் தரும் ஒளிரும் சிறிய பாலைவனச்சோலைகளாக இருக்க வேண் டும். இதிலிருந்து என்ன தெரிகிறது? கத்தோலிக்கச் சூழ்நிலையானது அன்பின் அடையாளமாக இருக்கிறது. மரியா வான் திராப் (ஆயசயை ஏழுெ வுசயி) என்ற பக்தியுள்ள பெண்மணி தான் எழுதிய தன் குடும்பத்தைப் பற்றிய புத்தகத்தின் முன்னுரையில் : "குடும்பத்தின் நினைவுகளை எழுதும் போது, அது என்னை ஆச்சரி செய்கிறது, குறுகிய வாழ் நாளில் உண்மை அன்பு எப்படி விளங்குகிறது என்பதைக் காணும் போது அது, என்னை மகிழ்ச்சியில் ஆழ்த்துகிறது.

முதலில் சர்வேசுவரனின் அன்பு. அவரது குழந்தைகளான நம் மீது சர்வேசுவரன் கொண்ட அன்பு துணை நின்று பாதுகாக்கும் ஒரு தந்தையின் அன்பு. ஒவ்வொரு அன்பும் உண்மையான திரும்பி நேசிக்கும் அன்பாக இருக்கிறது" என்று குறிப்பிடுகிறாள். கத்தோலிக்க இல்லம் ஒரு சுபாவத்துக்கு மேலான, சிநேகத்தால் ஆட்கொள்ளப்பட வேண்டும். ஆனால், இந்த நவீனக் காலங்களில் உண்மையான அன்பு அடிக்கடி தவறாகப் புரிந்து கொள்ளப்படுவதால், உண்மையான அன்பு எது என்பதை முதலில் தெளிவாக அறிந்துக் கொள்ள வேண்டும்.

## 2. உண்மையான அன்பு எது?

அர்ச். தாமஸ் அக்வினாஸ் ” நேசிப்பது என்பது நேசத்துக்குரியவரின் நன்மையை ஆசிப்பது” என்று நேசத்திற்கு இலக்கணம் வகுத்துள்ளார். ஒரு மனிதனுக்கு உண்மையாகவே நன்மையாக இருப்பது, எப்போதும் அந்த மனிதன் விரும்புவது போல இருப்பதில்லை , என்று பொருள் கூறுகிறார். இந்த உண்மையை ஒரு எடுத்துக்காட்டின் மூலம் விளக்கலாம். ஒரு தாய் தன் நோயுற்றக் குழந்தை பூரண குணமடைவதற்காக சில மருந்துகளைக் கொடுக்கிறாள். அந்த மருந்து மிகவும் கசப்பாக இருப்பதால் அக்குழந்தை அதனை விரும்புவதில்லை. தாய் குழந்தையை நேசிப்பதால், நோய் குணமாக வேண்டும் என்ற ஆவல் கொண்டு, குழந்தையைப் பலவந்தப்படுத்தி அந்த கசப்பான மருந்தைக் குடிக்கச் செய்கிறாள். இதே போன்ற தவறு தலான கண் ணோட்டம் தான் குழந்தைகளின் கல்வி வி'யத்திலும் நிலவுகிறது.

அநேக பெற்றோர் அன்பு என்பதைப் பற்றி ஒரு தவறானக் கருத்தைக் கொண்டிருக்கின்றனர். தங்கள் பிள்ளைகள் பேரில் பாசம் என்ற பலவீனத்தின் காரணமாக அவர்களது தவறுகளைத் திருத்துவதில்லை. அவர்களது வேண்டும் போக்கிலேயே விட்டு விடுகிறார்கள். இது மகா பெரிய தவறு! ஏனெனில் இத்தகையச் செயல் பிள்ளைகளை, சுயநலமுள்ள - வீட்டில் ஒவ்வொரு காரியத்தையும் தங்களது விருப்பப்படியே சாதிக்கும் சிறிய மூர்க்கர்களாக மாற்றி விடுகிறது. உண்மை அன்பு உறுதியானது. பெற்றோர்கள், ஜென் மப்பாவத்தால் காயப்பட்ட சுபாவ முடையவர்களையே குழந் தைகளாக கொண்டிருக்கிறோம் என்பதை உணர வேண்டும்.

ஆகையால் அனைத்துப் பிள்ளைகளும் சோம்பல், கீழ்ப்படியாமை, அன்பில்லாமை போன்ற தீயசார்புடையவர்களே. இவைகள் அந்த இளம் பிராயத்திலேயே உறுதியாகக் கட்டுப்படுத்தப்பட இல்லாவிட்டால், நீங்கள் உங்கள் பிள்ளைகளை கெடுக்கிறீர்கள். சில பெற்றோர் தங்களது குழந்தைகள் நவநாகரீக பாணிகளிலும், நவீன கேளிக்கைகளிலும் ஈடுபட அனுமதிக்கும் கொடுமையைக் காண்கிறோம். வேறு சிலப் பெற்றோர்களோ தங்களது அதிகாரத்தைப் பயன்படுத்தித் திருத்த

அஞ்சுகிறார்கள். இதனால் பிள்ளைகள் இழுக்கும், இழுப் புக் கெல்லாம் இடங்கொடுக்கிறார்கள். இந்த வகையான இல்லங்களில், பிள்ளைகளே அதிகாரிகளாக இருக்கிறார்கள்! தாங்கள் விரும்பும் எதையும் செய்கிறார்கள். எந்தவிதமானக் கட்டுப்பாடும் இல்லாமல் வீட்டுப்பொருட்களை தங்கள் விருப்பம் போல் உபயோகிக்கிறார்கள்.

தங்களது படுக்கை அறையை சுத்தமாக வைத்திருக்கவோ அல்லது தங்கள் தாய் தந்தையர்கோ வீட்டுக்காரியங்களில் உதவுவதில்லை. சாப்பாட்டு மேசையில் ஒழுங்கு, நாகரீகம் என்பது இல்லை . பெரியவர்களிடம் மரியாதையோடு பழகுவதில்லை . இப்படியாக எந்த விதமான சுயக்கட்டுப்பாடு இல்லாமல், பிள்ளைகளை வளர்ப்பது, அவர்களுக்கு நீங்கள் செய்யும் பெரிய மோசமான செயல் என்றே நான் நினைக்கிறேன. தங்கள் குழந்தைகளை ஒழுக்கத்தில் வளர்க்காத பெற்றோர்கள் அவர்கள் மீது உண்மையான அன்பு கொண்டிருக்க வில்லை .

**குடும்பச்செபம்**

இப்பொழுது மற்றுமொருப் காரியத்தைப் பற்றி பார்ப்போம்: அது குடும்பச்செபம்! ஒவ்வொரு தனிமனிதனுக்கும் ஜெபிக்கும் கடன் உண்டு. சர்வேசுவரனை ஆராதிக்கவும், அவருக்கு நன்றியறிந்த தோத்திரம் செய்யவும், நம்முடையப் பாவங்களுக்குப் பரிகாரம் செய்யவும், நமது தேவைகளுக்கான வரப்பிரசாதங்களை மன்றாடவும் அவரை நோக்கி நமது ஆன்மாவை உயர்த்த வேண்டும். இதுவே ஜெபம்! இவையே ஒரு ஜெபத்தின் நான்கு அம்சங்களாகும். சர்வேசுவரன் நம்மை உண்டாக்கியவர். அவர் நமது சிரு்‘டிகர். எனவே நாம் ஜெபத்தின் வழியாக அவரது அரசுரிமையை அங்கீகரிக்க வேண்டும். அதோடு சர்வேசுவரனே குடும்பத்தை உண்டாக்கியுள்ளார்.

ஆகையால் குடும்பம், அதனுடைய சொந்தக் கூரையின் கீழ் வெளியரங்கமாக கடவுளிடம் ஜெபிக்க வேண்டும். ஒவ்வொருவரும் தனது தனிப்பட்ட ஜெபங்களை தங்களது அறைகளில் ஜெபிக்கும் ஒரு குடும்பத்தை கற்பனை செய்து கொள்வோம். அது நல்லது தான்! ஆனால அது போதாது. குடும்பத்தில் உள்ள அனைத்து உறுப்பினர்களும், ஒரே சமூகமாகக் கூடி ஜெபிக்க வேண்டும்.

கத்தோலிக்கக் கணவர்களுக்கும், கத். தந்தைகளுக்கும் இதில் அதிசிறந்த உதாரணமாக திகழ்பவர் அர்ச். தாமஸ் மோர். தனது சட்டப்படியான மனைவி காத்தரீனை, விவாகரத்து செய்யும் இங்கிலாந்து அரசனின் முடிவால் ஏற்பட்ட கலாபனையினால் அவர் மிகவும் துன் புற்ற போதிலும், தனது வீட்டில் குடும்பச்செபத்திற்கு அனைவரையும் அழைத்தார். திருச்சபையின் தலைவர் அரசனே என்பதை அங்கீகரிக்க தாம் மறுத்து விட்டதை புரிந்துகொள்ள முடியாத தமது மனைவி ஆலிஸ் அம்மையாரால் அவருக்கு தலைவலி இருந்தது. ஆனாலும் அவர் குடும்பச்செபத்தை விட்டு விட வில்லை .

அவர் தமது அன்புக்குரிய குடும்பத்தினரோடு சேர்ந்து தினமும் ஜெபிக்காதிருந்தால், சந்தேகமற, அவர் ஒரு வேதசாட்சியாக மரிக்கத் தேவையான தைரியத்தையும் திடத்தையும் பெற்றிருக்க மாட்டார். நமதாண்டவரும்: “எங்கே இரண்டு அல்லது மூன்று பேர் எனது பெயரால் கூடியிருப்பார்களோ் அங்கே அவர்கள் மத்தியில் நான் இருக்கிறேன்” என்று கூறினார். பெற்றோர்களே தினமும் உங்கள் பிள்ளைகளோடு சேர்ந்து ஜெபியுங்கள், ஜெபமாலை சொல்லுங்கள். அதுவே பாத்திமாவில் நமதன்னை மிகவும் வற்புறுத்திக் கேட்டுக்கொண்ட விண்ணப்பங்களில் ஒன்று! நமது நல்ல அன்னைக்கும் கீழ்ப்படிவோமாக.

# 1. ஞானோபதேசம்

ஞானோபதேசம் மிகவும் அவசியமானது. ஆனால், அந்தோ! அநேக குடும்பங்களில் இது கைவிடப்பட்டு விட்ட ஒன்று. முன்பெல்லாம் பெற்றோர்கள் தங்கள் குழந்தைகளின் ஞானபோதனைகளுக்கு கத்தோலிக்கப் பள்ளிக்கூடங்களையே நம்பியிருப்பார்கள். இன்றோ, அத்தகைய நல்லப் பள்ளிகளை நாம் காண முடிவதில்லை. ஆகையால் குழந்தைகளுக்கு விசுவாசத்தைப் போதிக்க வேண்டியது அவர்களது தாய்மார்களையேச் சார்ந்தது. அதனால் பிள்ளைகள் இளமையில் இருக்கும் போதே நீங்கள் அவர்களுக்கு ஞானக்கல்வியை ஊட்ட ஆரம்பித்திட வேண்டும். சங். கெல்லி சுவாமி, சிறு பிள்ளைகளின் ஞான வாழ்வின் முன்னேற்றத்தில் உள்ள பல்வேறுபட்ட நிலைகளை, சுருக்கமாகக் கூறுகிறார்!

‘‘உங்கள் குழந்தையின் முதல் வருடத்தில் நீங்கள் அவனுடைய படுக்கையில் தீர்த்தம் தெளித்து, அவனுக்கு சிலுவை அடையாளம் வரைவீர்கள். அவனது இரண்டாம் வருடத்தின் மத்தியில் அவன் குழந்தை சேசுவின் படங்களை இனங்கண்டு கொள்ளவும், சிறு பாடல்களைப் பாடக் கற்றுக் கொள்ளவும் முடியும். அவனது மூன்றாவது வயதில், நீங்கள் அவனுக்கு சர்வேசுவரன் உலகனைத்தையும் படைத்தார் என்பதைப் போதிக்கவும், பூக்களிலும், பறவைகளிலும் மற்ற ஜீவராசிகளில் சிரு டிகரானக் கடவுளைக் காண உதவி செய்வீர்கள். உங்கள் குழந்தை நான்கு வயதாகும் போது, அவன் உங்களோடு ஆலயத்திற்கு வந்து திவ்விய பலிபூசையில் பங்கு கொள்ளவும், அங்கே அமைதியாக அமர்ந் திருக்கவும் தேவையான வயதைக் கொண்டிருப்பான். ஆலயத்தில் நீங்கள் ஜெபிப்பதை அவன் காண்கிற போது, வேறு எவ்விடத்தையும் விட சர்வேசுவரனோடு நெருங்கியிருக்க ஆலயத்திற்கே மக்கள் போகிறார்கள் என்பதைப் புரிந்து கொள்வான். அவன் தனது வாழ்நாட்கள் முழுவதிலும் சொல்ல இருக்கும் ”கர்த்தர் கற்பித்த பரலோக மந்திரம்’’, ‘‘அருள் நிறைந்த’’ மந்திரத்தை அறிந்து, கற்றுக் கொள்வான். அவனது 5 வயதில் காலை மாலை ஜெபங்களைத் தொடர்ச்சியான முறையில் சொல்லத் துவங்க இயலும். இப்போது அவன் நல்லது, கெட்டதன் வேறுபாடுகளை அறிந்து கொள்ளக் கூடியவனாய் இருப்பான். உதாரணமாக, ஏன் திருடக் கூடாது என்று

புரிந்து கொள்ள முடியும். அவனது ஆறாவது வயதில் அவன் ஆரம்ப ள்ளிக்கூடத்தில் சேரும் முன்பாக, சிலுவை அடையாளம் வரைந்து கொள்ளவும், தீர்த்தத்தால் தன்னை ஆசீர்வதித்துக் கொள்ளும் பக்குவம் பெறுவான். அவனது இத்தகைய செயல்கள் உங்களைப் பார்த்து தான் கற்றுக் கொண்டான். நீங்கள் செய்வதைக் கண்டதாலேயே அவனும் செய்கிறான்.

உங்கள் குழந்தை, கேள்விகளையும், பதில்களையும் நினைவு படுத்திக்கொள்ளும் திறன் பெறும் போது, நீங்கள் சிறந்த ஞானோபதேச பாடப் புத்தகத்தை ஏற்பாடு செய்து, அவனது புதுநன்மைக்கு தயாரிப்புக்காக, அதனை அவன் கற்றுக் கொள்ளும்படிச் செய்ய வேண்டும். அதோடு இன்னும் பல சிறு, சிறு ஞானப் புத்தகங்களைக் கற்றுக் கொள்ளும்படிச் செய்ய வேண்டும். பிள்ளைகள் இன்னும் இளம் பிராயத்தில் இருக்கும் போதே ஞான உபதேசத்தை நிறுத்துவது பெரியத் தவறாகும். நீங்கள் வேத சத்தியங்களில் திடமான தெளிவு கிடைக்கும் வகையில் ஞான அறிவை அவர்களுக்கு வழங்க வேண்டும். அதனால் அவர்கள் தங்களது வாலிப வயதில் உறுதியான விசுவாசத்தைப் பற்றி நிற்க அவர்களால் முடியும்.

குடும்ப ஜெபங்கள் (காலை மாலை ஜெபங்கள், திரிகால ஜெபங்கள், உணவுக்கு முன், பின் ஜெபங்கள்) மற்றும் ஞானோபதேசங்களோடு கூட, உங்களது பிள்ளைகள் சர்வேசுவரனை அறிந்து, நேசித்து, ஊழியம் செய்ய உதவுவதற்கு இன்னும் பல வழிகள் உள்ளன. அவை புதுநன்மை, ஞானஸ்நானம், பெயர் கொண்ட திருநாள் (உங்கள் குழந்தைகளுக்குச் சூட்டப்பட்ட பெயர்கொண்ட அர்ச்சி'டவர்களின் திருநாட்கள் - இன்று பிள்ளைகளுக்கு அர்ச்சிஷ்டவர்களின் பெயர்களை இடுவது குறைந்து கொண்டு வருகிறது - ஆசிரியர் கருத்து) ஆகியவற்றை சிறப்பாகக் கொண்டாடுங்கள்.

ஆம்! இத்தகைய வழிபாடுகள் இல்லங்களில் தேவ அனுசரனைக்கு மிகப் பெரிய வாய்ப்புகளைத் தருகின்றன. இவை திருச்சபையின் திருநாட்கள், குடும்ப வாழ்வில் முக்கிய அங்கங்களாக இருக்கின்றன என்பதை குழந்தைகள் உணர பெரிதும் உதவுகின்றன.

அதோடு கூட ஒவ்வொரு குடும்பமும் தங்களுக்கென சிறு, சிறு ஞானப் பழக்கவழக்கங்களை ஏற்படுத்திக் கொள்ளலாம். உதாரணமாக, ஆகமனக் காலப் பூச்செண்டு தயாரித்தல், கிறிஸ்மஸ் குடில், தவக்கால

ஒறுத்தல் அட்டவணை ஈஸ்டர் முட்டைகள் போன்றவை. இவைகளைப் பற்றி அதிகம் கூற போதிய அவகாசம் எனக்கு இல்லை . ஆனால் இவைகளைப் பற்றி நன்கு விவரிக்கும் புத்தகங்களும், சிறு இதழ்களும், பத்திரிகைகளும் ஏராளமாக இருக்கின்றன.

## 3. கிறிஸ்தவப் பண்பு

டாம் கௌரான் கர் (Dom Gueranger) அவரது ”திருவழிபாட்டு ஆண்டு’’ என்ற நூலில் மூன்று இராஜாக்களின் திருநாளுக்கு தயாரிப்பதற்காக, குடும்பங்களின் பழக்க வழக்கங்களை விவரிக்கும் போது, இத் தகையவைகள் நமது முன் னோர்களின் விசுவாசத்திற்கு எளிய விதமாகத் திரும்புதலுக்கு உதவுகின்றன என்று கூறுகிறார்.

அவர் நமது வேதத்தின பரிசுத்தமான காரியங்கள், நிகழ்ச்சிக ளோடு, குடும்ப சந்தோ‘த்தின் அவசியத்தையும் ஆணித்தரமாகக் கூறுகிறார். இத்தகைய அழகிய பாரம்பரியமான பழக்கங்கள் மீண்டும் குடும்பங்களில் கொண்டுவர முயற்சிகளை மேற்கொள்வோமாக. திருச்சபையும் கூட, கத்தோலிக்க நாடுகளில் திருநாட்களை விசுவாச உணர்வோடு கொண்டாட, மிக அற்புதமான இராகங்கள், பாடல்கள், உணவு தயாரிக்கும் முறைகள், கதைகள் மற்றும் விளையாட்டுகளைக் கொண் டாடத் தூண்டுகிறது.

இவைகளைத் தவிர குழந்தைகள் தங்களது விசுவாசத்தை நேசிக்கச் செய்ய சிறந்த வழிகளை நான் அறியவில்லை . இதன் மூலம் அவர்கள் திருச்சபை ஒரு நல்ல தாய் என்பதையும், அதனுடைய குழந்தைகளான நமது மகிழ்ச்சியைத் தான் திருச்சபை தேடுகிறது - ஆசிக்கிறது என்பதையும் உணர முடிகிறது. இப் போது, நமது பாரம் பரியக் கத்தோலிக்கர்களிடையே அடிக்கடி தாராளமாகக் காணப் படும் ஒரு குறையைச் சுட்டிக் காட்ட விரும்புகிறேன். அது என்னவென்றால் - இயல்பான நியதியை புறக்கணிப்பதே அது! அர்ச். தாமஸ் அக்குவீனாஸ், ““வரப் பிரசாதம் இயல்பை அகற்றுவதில்லை , மாறாக அதனை உத்தமமாக்குகிறது’’ என்று போதிக்கிறார். இதற்கு என்ன பொருள் என்றால், பெற்றோர்கள் தங்களது பிள்ளைகளின் ஆன்மாவில் சுபாவத்துக்கு மேலான புண்ணியங்களை (விசுவாசம், நம்பிக்கை, தேவசிநேகம், ஒழுக்க நன்னடத்தை) மட்டுமல்லாமல் சுபாவத்துக் கடுத்த இயல்பான புண்ணியங்களிலும் (பண்பாடு, நேர்மை, விடாமுயற்சி போன்றவை) வளரச் செய்வதைக் கடமையாகக் கொண்டிருக்கிறார்கள்.

அதிலும் குறிப்பாக, நான் கோடிட்டுக் காட்ட விரும்புவது, அறிவு உருவாக்கத்தின் அவசியத்தையே! உள்ளார்ந்த ஞான ஜீவியத்தின் விதைகள் இயல்பான, முழுமையான உள்ளத்தில் தான் சிறப்பாக

வளரும் என்பது நிச்சயம். இதனைச் சில உதாரணங்கள் மூலம் சற்று தெளிவுப் படுத்துகிறேன்.

இளம்பருவத்திலுள்ள உங்கள் பிள்ளைகள், அவர்கள் சிறு குழந்தைகளாக இருக்கும் போது சிறு, சிறு பக்தி இராகங்களையும், ஞானப்பாடல்களையும் பாடப் பழகாதிருக்கும் பட்சத்தில், அவர்கள் தேவாலயத்தில் தேவ வழிபாட்டுக் கீதங்களையும், இராகங்களையும் (குறிப்பாக உயிர்ப்பு திருவிழிப்புச் சடங்கில் பாடப்படும் உயிர்ப்பு அறிவிப்பு பாடலை) ஏற்றுப் பக்தியோடு பாட வேண்டும் என்று நீங்கள் எப்படி எதிர் பார்க்க முடியும்?

அவர்கள் சிறுவர்களாக இருக்கும் போது, எளிய பாடல்களை ஒரு போதும் பாடியது இல்லையென்றால், அவர்கள் கிரகோரியன் இராகங்களை தேவாலயத்தில் பாடவும் அதில் துய்க்கவும் வேண்டுமென்று நீங்கள் எப்படி எதிர்பார்க்க முடியும்? அவர்கள் முதன் முதலில் வாசிக்கத் துவங்கும் சமயத்தில் நல்லப் புத்தகங்களையும், சிறுவர் கதைகளையும் படிக்கவில்லை யானால், அவர்கள் எப்படி அர்ச்சி‘டவர் களின் வாழ்க்கை வரலாறு களை வாசிக்க முடியும்? சிறந்த கத்தோலிக்க எழுத்தாளரான சார்லஸ் “பேகேய்“ என்பவர் கூறுவது போல . . . விசுவாசத்திற்கும் கலாச்சாரத்திற்குமிடையே எந்த எதிர்ப்புக்கான வாய்ப்பும் இல்லை.

ஆனால் அவற்றை நல்ல முறையில் பரிச்சயம் செய்வதில் தான் இந்த எதிர்ப்புகள் உள்ளன. ..’’ என்று கூறுகிறார். வேறு வார்த்தைகளில் கூறுவதாயிருந்தால், கிறிஸ்தவக் கலாச்சாரம், பண்பு ஆன்மாவின் உணர்வுகளைச் செம்மைப்படுத்துகிறது. ஞான வாழ்வின் மலர்ச்சிக்குத் தேவையான சிறந்த சூழ்நிலைகளை உருவாக்கித் தருகிறது.

மீண்டும் ஒருமுறைச் சொல்கிறேன்: அர்ச். குழந்தை சேசுவின் தெரேசம்மாளின் குடும்பத்தின் கதையை வாசித்தீர்களானால், எப்படி அவளது பெற்றோர்கள் தங்களது பிள்ளைகளின் கல்விக்கும், அவர்கள் கதைகள், கவிதைகள், பாடல்கள் எழுதுவதிலும், படங்கள் வரைவதிலும் சிறந்து விளங்க வேண்டுமென்று ஆசித்தார்கள் என்பதை நீங்கள் காண்பீர்கள்.

அவர்கள் தங்கள் குழந்தைகளோடு விளையாடுவார்கள், அவர்களது விளையாட்டுக்களில் அதிக ஆர்வம் காட்டுவார்கள். ஆம்! இந்த

உண்மையை மீண்டும், மீண்டும் உணர வேண்டும். பாரம்பரியக் கத்தோலிக்கராக இருப்பது லத்தீன் பூசைக்குச் செல்வது மட்டுமே அல்ல, மாறாக முழுமையான கத்தோலிக்க வாழ்வையும் கொண்டிருப்பதேயாகும்.

## 4. தொலைக்காட்சியால் வரும் ஆபத்து!

திருச்சபையின் எதிரியானவன் கத்தோலிக்க இல்லங்களில் ஒரு கொடூரத் தாக்குதலை நிகழ்த்தியுள்ளதால், இக்காலங்களில் பெற்றோர்களுக்கு ஒரு கடினமான அலுவல் உள்ளது என்பதை நான் ஏற்றுக் கொள்ளத்தான் வேண்டும். உங்களது குழந்தைகளின் ஆன்மாக்களை நரகத்தில் அமிழ்த்த முயற்சிக்கும் சாத்தானைப் பொருத்தவரையில் இது ஒரு உண்மையானப் போர். நாம் விழிப்பாக இருப்போமாக. அந்தோ! உங்களில் சிலர் இந்த வி'யத்தில் இன்னமும் கூட, மிகவும் கவனமில்லாமல் தான் இருக்கிறார்கள்.

இது முக்கியமான காரியமாதலால், நான் உங்களுக்கு ஒரு சிறிய தெளிவான அறிவுரையைத் தருகிறேன். அது என்னவெனில்: முதலில் உங்கள் வீட்டிலுள்ள டி.வி. பெட்டியை வெளியே வீசியெறியுங்கள். அநேகப் பெற்றோர்கள், தங்கள் குழந்தைகள் எப்பொழு தெல்லாம் விரும்புகிறார்களோ, அப்பொழுதெல்லாம் ஒரு நாளைக்குப் பல மணி நேரங்களானாலும் எந்தவிதக் கட்டுபாடும் இல்லாமல், டி.வி. பார்க்க அனுமதிக்கிறார்கள். அதில் உண்மையாகவே (கற்புக்கெதிரான, தீவிரவாதத்தைத் துாண்டுகிற, உலகத்தன்மையான) கெட்ட ஆபத்தான நிகழ்ச்சிகள் உள்ளன. இதற்குச் சற்றும் குறையாத தீமைகள் பயக்கும் மற்றொரு ஆபத்தும் கூட உள்ளது!

ஜாண் சீனியர் என்பவர், ‘‘கிறீஸ் தவக் கலாச்சாரத்தை மீண்டும் ஏற்படுத்துதல்’’ என்ற தனது அருமையான நூலில் டி.வி. பார்ப்பதனால் ஏற்படும் இரண்டு தீமைகளைக் குறிப்பிட்டுள்ளார். ஒன்று உடல் மட்டும் மனரீதியான அசமந்த நிலையை ஏற்படுத்தும் ஆபத்து, மற்றொன்று உண்மையான யதார்த்த நிலையை மறைத்து, திரித்துக் காட்டி கற்பனையில் வாழும் நிலையை உருவாக்குவதாகும். டி.வி. ஆனது மெல்ல, மெல்ல மனிதர்களின் மனங்களைக் கட்டுப்படுத்தும் போதை மருந்தைப் போன்று, கொஞ்சம் கொஞ்சமாக அவர்களை மந்தப்புத்தி உள்ளவர்களாகவும், சுயமாகச் சிந்திக்கும் ஆற்றல் அற்றவர்களாகவும் மாற்றுகிறது என்று குறிப்பிட்டுள்ளார்.

சங். ஓ கென்னல் சுவாமி என்பவர் சற்று நகைச்சுவையாக ”மகுடியின் முன்பாக மயங்கும் பாம்பை’’ போல் மனிதர்களைத் தன்வயப்படுத்தி,

மனித மாண்பையே உதரச்செய்து பலமணி நேரங்கள் தம்முன் பசைபோல் ஒட்டி, அமர்த்தி வைத்து விடுகிறது. அவர்கள் வசியம் செய்யப்பட்ட முயல் போல் அசைவற்றுக் கிடக்கிறார்கள் என்று கூறுகிறார். சிறுவர்களை, முகாம்களிலோ அல்லது வேறு அலுவல் நேரத்திலோ பார்க்கும் போது, பார்த்த மாத்திரத்தில் ஒரு குருவானவரான என்னால், யார் அதிகம் டி.வி. பார்ப்பார்கள் அல்லது மாட்டார்கள் என்று உடனடியாகக் கூறிவிட முடியும்.

டி.வி. பார்க்கும் குழந்தைகள் தவறான குணாதிசயங்களை வெளிப்படுத்துவார்கள். எதிலும் கவனம் செலுத்த சிரமப்படும் அவர்களுக்கு வேடிக்கை பொழுதுபோக்குகள் இல்லாவிட்டால் எந்த காரியத்திலும் சலிப்படைந்து விடுவார்கள். எந்தவிதமானப் புது சிந்தனைகளுக்கும் ஆர்வம் காட்டாதவர்களாகவும், அதைவிட மிகவும் மோசமாக, ஜெபிக்கவும், தியானிக்கவும் விருப்பம் இல்லாதவர்களாகவும் இருப்பார்கள்.

இந்தப் பிரசங்கத்தை இன்னும் நீடிக்க நான் விரும்பவில்லையானதால், ஒரு சில கருத்துக்களை மட்டும் சுருக்கமாகக் கூறிவிடுகிறேன். மேற்கத்திய ஆபாச ராக் இசை உங்கள் இல்லங்களில் தடை செய்யப்பட வேண்டியதொன்று. நமதாண்டவர் வேண்டுமா அல்லது சாத்தான் வேண்டுமா? என்பதை நீங்கள் தெரிவு செய்து கொள்ளுங்கள். இரண்டும் வேண்டுமென்றோ, நடுநிலையில் உள்ளேன் என்றோ இருக்க முடியாது. அர்ச். இஞ்ஞாசியார் தமது ”ஞானபயிற்சிகளில்’’ குறிப்பிடுவது போல, 2 குழுக்கள், 2 படைகள், 2 கொடிகள் தான் உள்ளன.

ராக் இசைகள் போன்றவை நிச்சயம் பசாசின் முகாமைச் சேர்ந்தவையே. எந்த ஒரு பொருளைப்பற்றிய புத்தகத்தை வாசித்தாலும், அதன் கருத்துக்கள் உங்களை நிச்சயம் பாதிக்கும். அதன் கருத்துக்கள் உங்களுக்கு ஏற்புடையதாகி விடும் என்பது நிச்சயம். எனவே யதார்த்தமாக இருங்கள்.

ஒரு தடவை ஒரு பாரம்பரிய கத்தோலிக்கக் குடும்பத்தினரோடு தங்கியிருந்தது நினைவுக்கு வருகிறது. நான் தங்குவதற்கு தங்களது 15 வயது மகனின் படுக்கை அறையை ஒதுக்கியிருந்தார்கள். அங்கே சுவரில் ஒரு அழகிய சேசுவின் திருஇருதயப் படம் மாட்டப்பட்டிருந்தது கண்டு மகிழ்ச்சியடைந்தேன். பிறகு அப்படியே அங்கேயிருந்த அலமாரியின் மீது நிறைய கேசட்டுகள் அடுக்கப்பட்டிருந்தது கண்டு

சற்று மேலோட்டமாகப் பார்த்தேன். அதில் ‘‘நரகம் ஒன்றும் தீய இடமில்லை ’’ என்ற பிரபல்யமான பாடல்கள் அடங்கிய யுஉள.ீ.னுஉள நாடாக்கள் கேசட்டைக் கண்டு திடுக்கிட்டுப் போனேன். இது ஒரு கத்தோலிக்க இல்லத்தில் என்ன இருக்கக் கூடாது என்பதற்கு சிறந்த உதாரணமாகும்.

இதே போன்று புத்தகங்கள் வி‘யத்திலும் உள்ளது. மற்றொரு தடவை வேறொரு குடும்பத்தைச் சந்திக்கப் போயிருந்தேன். அவ்வீட்டிலுள்ள ஒரு பிள்ளையின் அறைக்குள் சென்றேன். அங்குள்ள புத்தக அலமாரியில் ஜனரஞ்சகமான காதல் கதைகள் அடங்கிய புத்தகங்கள் வைக்கப்பட்டிருந்தது. அத்தகையப் புத்தகங்கள் நமது பெண்பிள்ளைகளின் மனதைப் பாதிக்கும் என்பதில் எவ்வித சந்தேகமுமில்லை . உங்கள் வசம் கொடுக்கப்பட்ட விலைமதிப்பில்லாத ஆன்மாக்களை நல்லவர்களாக, விசுவாசமுள்ளவர்களாக, ஆன்ம அழகுள்ளவர்களாக எல்லாம் வல்ல சர்வேசுரனிடம் ஒப்படைப்பது உங்கள் கடமையாகும். அதனால் மீண்டும் கூறுகிறேன், நீங்கள் நன்மாதிரி காட்ட மறவாதீர்கள்.

## 5. குடும்பங்களில் தேவஅழைத்தல்கள்!

தந்தையர்களே, நீங்கள் உங்கள் வார ஓய்வுநாளை நல்ல புத்தகங்களை வாசிப்பதில் செலவிடாமல் நாள் முழுவதும் டி.வி.யில் கிரிக்கெட் மேட்ச் பார்ப்பதில் கழித்தால், உங்கள் மகன்கள் நல்ல புத்தகங்களை வாசிக்கும் ஆர்வம் கொண்டவர்களாக இருக்க வேண்டும் என்று எதிர்பார்க்காதீர்கள். தாய்மார்களே, உங்கள் பெண் மக்கள் நீங்கள் ஜனரஞ்சமான பெண்கள் வார, மாத பத்திரிகைகளை வாசிக்க ஆர்வம் கொண்டிருக்கக் காண்பார்களேயானால், உங்கள் மகள்கள் நல்ல கத்தோலிக்கக் கதைப் புத்தகங்களைப் படிக்க ஆர்வம் கொள்ள வேண்டும் என்று எதிர்பார்க்காதீர்கள். நாம் நமக்குரிய மதிப்போடு இருந்து கொள்வோமாக! சிறந்த நல்லொழுக்கச் சட்டத்தை அனுசரிக்கும் கத். குடும்பம், நமதாண்டவரும், மாதாவும் விரும்பாத எதையும் தமது இல்லத்தில் அனுமதிக்காது.

இவ்வுரையை நிறைவு செய்வதற்கு முன்பாக, நான் எளிமையின் அவசியம் பற்றி குறிப்பிட விரும்புகிறேன். இந்த நவீன உலகம் தம்மையே தவறான மதிப்பீடுகளில் கறைப் படுத்திக் கொண்டிருக்கிறது. எப்படியெனில், நாம் நமது வீடுகளில் நமது வாழ்வை வசதியாக்கும், மகிழ்ச்சிக்குள்ளாக்கும் இயந்திரங்களையும், சாதனங்களையும் வாங்கி நிரப்புகிறோம். இது மட்டுமே, மனிதனின் உண்மையான இலக்கு - நோக்கம் அல்ல. மைக்ரோவேவன் அடுப்பையும், கம்ப்யூட்டர்களையும் ஆராதிப்பதற்காக நம்மை நமதாண்டவர் படைக்கவுமில்லை, தமது விலைமதிப்பில் லாத திரு இரத்தத்தால் இரட்சிக்கவுமில்லை.

இத்தகைய நவீன சாதனங்களை பயன்படுத்தலாம். ஆனால், அது அளவோடு இருக்க வேண்டும். அவற்றிற்கு அடிமையாகாமல், அவற்றின் மீது அளவுக்கு அதிகமாக பற்றுக் கொண்டவர்களாக இருக்கக் கூடாது. அர்ச். சின்னபர் கூறுவது போல, ‘‘உலகப் பொருட்களை பயன்படுத்தாதவர்களைப் போல், அவற்றைப் பயன்படுத்த வேண்டும். சிறிய எளிய பொருட்களை விரும்புவோ மாக. வறுமை உணர்வை எப்போதும் மனதில் கொள்வோமாக. ஒரு சில குடும்பங்கள் தேவ அழைத்தலைப் பெற்றுக்கொள்வதைக் காணும் போது: இந்த இல்லத்தின் இயல்பு என்ன? என்று அடிக்கடி எனக்குள்ளே கேட்டுக் கொள்வேன்.

அங்கே தயாளமான தியாக உணர்வு, எண்ணம் முக்கிய இயல்பாக இருப்பதைக் கண்டு பிடித்தேன். அங்கே, பிள்ளைகள் தங்கள் அயலாருக்கு உதவி செய்ய, தங்கள் தேவைகளை மறக்கக் கற்றுக் கொடுக்கப்படு கிறார்கள். (உதாரணமாக: அவ்வப் போது நோயாளிகளைச் சந்தித்து ஆறுதல் தருவதிலும், ஏழைகளு க் கு உதவுவதிலும பிள்ளைகள் ஊக்கப்படுத்தப்படுகிறார்கள்). வாழ்வின் மகிழ்ச்சி சர்வேசுரனை மகிழ்விப்பதிலும், அவருக்காகக் காரியங்களை ஆற்றுவதிலும் அடங்கியுள்ளது என்பதைப் பெற்றோர்கள் தங்கள் வாழ்க்கையில் எண்பிக்க வேண்டும்.

அப்படிப்பட்டவர்களின் குழந்தைகள் தான் பெரியவர்களாக வளரும் போது, “துறவற அழைத்தல்” பற்றிய எண்ணமும், ஆவலும் கொண்டவர்களாகத் திகழ்கிறார்கள். அந்த அழைப்பை ஏற்றுச் செயல் படுத்துவதில் எந்தப் பிரச் சினையும் ஏற்படுவதில்லை. தேவ அழைத்தலின் சாராம்சமே தன்னையே கடவுளுக்குக் காணிக்கையாக வழங்குவது தான். உலகத்தன்மை வசதிகளை அனுபவிக்கும் எண்ணம் ஆகியவைகளுக்குப் பதிலாக, தயாளம், தியாகம் ஆகியவைகள் கற்றுக் கொடுக்கப்படும் இல்லத்தில் தேவ அழைத்தல்கள் மிக எளிதாக வளரும்.

அன்பான பெற்றோர்களே! மனம் தளர்ந்து போகாதீர்கள். ஆம், ஒரு உத்தம கத். இல்லத்தை ஏற்படுத்துவது என்பது கடினமானக் காரியமே. ஆனால், அது மிகுந்த மகிழ்ச்சியும், ஆறுதலையும் கொண்ட ஒரு அழகான அருமையான அழைத்தல்.

பாத்திமா காட்சி பெற்ற சகோதரி லூசியா: ”

மரியாயின் மாசற்ற இருதயம், குறிப்பாக மிகுந்த கடினமான துன்ப வேளைகளில் எனது அடைக்கலமாக இருக்கிறது. ஆகையால் நான் எப்பொழுதுமே பாதுகாப்பாக இருக்கிறேன். மரியாயின் மாசற்ற இருதயம், தமது ஒவ்வொரு பிள்ளைகளையும் எப்போதும் கவனித்துப் பாதுகாக்கின்ற மிகச் சிறந்த அன்னையின் இருதயமாக இருக்கிறது. இந்த எண்ணம் உண்மையாகவே என்னை எவ்வளவு உற்சாகப்படுத்துகிறது, திடமளிக்கிறது தெரியுமா? மரியாயின் மாசற்ற இருதயத்திடம் நான் திடத்தையும், ஆறுதலையும் கண்டடைகிறேன். இந்த மாசற்ற இருதயமே, சர்வேசுரனின் அளவற்ற வரப்பிரசாதங்களை

எனது ஆன்மாவில் பொழியும் வாய்க்காலாக இருக்கிறது'' என்று கூறியுள்ளாள .

எனவே, நாம் நமது குடும்பங்களை இந்த அன்புள்ள நமது மோட்ச அன்னையின் அன்பான மாசற்ற இருதயத்திற்கு அர்ப்பணிப்போமாக. நமதன்னை அவர்களது தெய்வீக குமாரன் சேசு நமது இல்லங்களில அறியப்படவும், நேசிக்கப்படவும், ஊழியம் செய்யப்படவும் வேண்டுமென்று விரும்புகிறார்கள். அவர்களே நம்மைக் கவனித்துக் கொள்வார்கள். நமது நித்திய மோட்ச வீட்டிற்கு வழிநடத்திச் செல்வார்கள். ஆமென்

## 6. நல்ல பெற்றோராக இருப்பது எப்படி?

தக்காலத்தில் நல்ல பெற்றோராக இருப்பது எளிதான தல்ல. தவறும் மனித சுபாவமானது, அடங்கி பணிந்திருப்பதை எதிர்க்கும் தன்மை கொண்டதால் பிள்ளைகள் பெற்றோருக்கு கீழ்ப்படிவதில்லை. ஆகையால்தான் பெற்றோருக்கு மிக கடுமை யான கடமைகளுண்டு என்று கூறுகிறேன்.)

தங்கள் பிள்ளைகள் மட்டில் பெற்றோருக்கு இருக்கும் பொறுப்புக்களை விவரிக்கும் அம்சங்களைப் பற்றி பார்ப்பது நல்லது. சர்வேசுரனுடைய கற்பனைகளில் நாலாவது கற்பனை: "உன் பிதாவையும் மாதாவையும் சங்கித் திருப் பாயாக" என்பதாகும். இந்தக் கட்டளையானது பெற்றோர்கள் தங்கள் குழந்தைகள் மட்டில் நிறைவேற்ற வேண்டிய கடமைகளை உள்ளடக்கியுள்ளது. இந்தக் கடமைகளையும், பொறுப்புக்களையும் நிறைவேற்ற பெற்றோர்கள் முதலில் அவைகளின் அம்சங்களை அறிந்து கொள்ள வேண்டும். அவைகளைப் பற்றி அடிக்கடி சிந்திக்க வேண்டும். அந்த அம்சங்களை கீழ் வருமாறு காண்போம்:

(1) பெற்றோர்கள் கொண்டுள்ள அதிகாரம் சர்வேசுர னுடைய அதிகாரமாகும். அதனைக் கொண்டு அவர்கள் தங்கள் குழந்தைகளை முதலில் மோட்சத்தை நோக்கியும், இரண்டாவது இவ்வுலகில் பயனுள்ள மகிழ்ச்சியான புண்ணிய வாழ்வை மேற் கொள்ளவும் வழிநடத்த வேண்டும்.

(2) பெற்றோருடைய அதிகாரம், அன்பை வெளிப் படுத் தும் படியாகவும் அதனையே அடிப்படையாகக் கொண்டதாகவும் இருக்க வேண்டும். இல்லாவிட்டால், அது பயனுள்ளதாக இருக்காது. சர்வேசுரன் மனிதர்கள் அன்பற்றவர்களாக இருக்க வேண்டுமென்று ஒருபோதும் கட்டளையிட்டதில்லை. ஆனால் சர்வேசுரன், மனிதர்கள் மீது தாம் கொண்டிருக்கும் அளவற்ற அன்பை, சிநேகத்தை வெளிக்காட்டுகிறார். இத்தகைய சிநேகமே அவரைச் சிலுவையில் மரிக்கத் தூண்டியது. பெற்றோர்களின் அன்பு வெளிப்படையாக இருக்க வேண்டும். அதனால் தங்களைக் கண்டிக்கும் அதே பெற் றோர் தங் களை முழு இருதயத்தோடு சிநேகிக்கிறார்கள் என்பதை குழந்தைகள் காண்பார்கள்.

பெற்றோர்களின் அன்பு தியாகத்தின் மூலமாகவும், தங்கள் குழந்தைகளின் மனித இயல்பை மதிப்பதிலும், தோழமைக் கொள்வதிலும் வெளிப்பட வேண்டும். மேலும் அவர்களது கல்வி, வேலை, விளையாட்டு மற்றும் ஞான வாழ்வில் அவர்களது முன் னேற்றம் ஆகியவற்றில் அக்கறைக் கொள்வதிலும் பெற்றோர்களின் அன்பு வெளியாக வேண்டும்.

(3) பெற்றோர்களின் அதிகாரம் அவர்களது நன்மாதிரிகை யால் உறுதிப்படுத்தப்பட வேண்டும். ஞானம் மற்றும் நல்லொ ழுக்கக் காரியங்களில் எல்லாவற்றிலும் பெற்றோர்களின் முன் மாதிரிகையே குழந்தைகளுக்கு முதல் போதகமாக இருக்க வேண்டும் நன் மாதிரிகை இல்லையெனில், கூறும் விளக்கங்களோ, கடைப் பிடிக்கச் சொன் னக் கட்டளைகளோ, செய்யக் கூடாது என்று விதித்தத் தடைகளோ, திருத்தங்களோ எவ்வித பயனையும் விளைவிக்காது.

(4) பெற்றோர்களுடைய அதிகாரம் அவர்களது குழந்தைகளின் குணம், வயது, ஆண் பெண் வேறுபாடுகளின் படி வெவ் வேறான முறையில் செயல்படுத்தப்பட வேண்டும்.

உலகில் பிறக்கும் ஒவ்வொரு குழந்தையும் ஒரு வித்தியாச மான மனித ஆளுமைத் தன்மையையும், அதனுடைய தனிப்பட்ட குணங்களையும், பாலியல்புக்கு ஏற்ப பண்புகளையும் கொண்டுள்ளது. அது மேலும் மேலும் முதிர்ச்சியை நோக்கி வளர வித்தியாசமான வழிநடத்துதல் தேவை. எல்லாக் குழந்தைகளின் தேவைகளில் அடிப்படையானது என்னவெனில், அவர்களது இளம் பிராயத்திலேயே பெற்றோர்களின் அதிகாரத்தை மதிக்கப் பயிற்சி விப்பதேயாகும். தங்கள் குழந்தைகளை, அவர்களது சிறு வயதி லேயே அவர்கள் விரும்புவது போல் நடக்க அனுமதிக்கும் பெற்றோர்கள் பின்னாளில் அவர்கள் வளர்ந்த பின்பு கீழ்ப்படிதலை எதிர்பார்க்க போவதில்லை. பிள்ளைகளை இளம் பருவத்திலேயே திருத்தாவிட்டால் அவர்கள் வளர்ந்து வாலிபராகிவிட்ட பிறகு பெற்றோர்கள் அவர்களை, தங்கள் அதிகாரத்தைப் பயன்படுத்தி நல்லது செய்யவோ அல்லது தீமையிலிருந்து காப்பாற்ற முயல் வதோ பயனற்றதாகும்.

அதே சமயம் ஒவ்வொரு குழந்தையிடமும் அதனின் தனிப்பட்ட ஆண் அல்லது பெண் பாலினத்திற்கேற்ப பெற்றோர்களின் அணுகு முறை அமைய வேண்டும். தகப்பன் மகளை வழிநடத்து வதைப் போன்று

மகன்களையும் வழிநடத்த முடியாது என்பதில் கவனமாக இருக்கவேண்டும். தாய்மார்களும் ஒரு மகனின் குணத்தைத் திருத்த முயலும், அதே முறையில் மகளையும் திருத்த முயற்சிப்பதில எச்சரிக்கையாக இருப்பார்களாக. பெற்றோர் இருவரும் தங்களது பிள்ளைகளின் தனிப்பட்ட மனநிலைகளை அறிந்து, அதற்கேற்ப அவர்களை வழிநடத்த வேண்டும்.

அசமந்தமும், பயமும், ஆர்வமுமற்ற குழந்தைக்கு உற்சாகமும், சுயநம்பிக்கையும் தேவையென்பதையும் குறும்புத்தனமான பிள்ளைகளுக்கு ஒழுங்கு, கட்டுப்பாடு மற் றும் அடிக்கடி திருத்துதல் போன் றவை தேவையென்பதையும் பெற்றோர்கள் அறிந்திருக்க வேண்டும். புத்திசாலித்தனமான சுட்டிப்பிள்ளைகளாக இருந்தால் புகழ்ச்சியையும், அதே நேரத்தில் தாழ்ச்சியையும் கற்பிக்க வேண்டும். மந்தப்புத்தியுள்ள பிள்ளைகளாக இருந்தால் பொறுமை யோடு திருத்துதல், புரிந்து கொள்ளுதல் ஆகியவற்றைப் பயன்படுத்தி அவர்களை மாற்ற முயல வேண்டும். இவையெல்லாம் இருந் தாலும் கூட, பெற் றோர்களை மதிக்க சிறுவயதிலேயே கற்றுக் கொடுக்கப் படாவிட்டால் ஒரு பயனும் ஏற்படப்போவதில்லை

## 7. பெற்றோருக்குரிய கடமை என்ன?

குழந்தைகள் இளம் பருவத்தினராக வளர்வதற்கேற்ப பெற்றோர்களின் அணுகுமுறை இருக்க வேண்டும். அதிகாரம் கண்டிப்பான கட்டளையாக இருப்பதை விட, அன்பான ஆலோசனைகளாக திகழ்வது அவசியம். அநேக பெற்றோர் தாங்கள் விரும்பும் ஒரு காரியத்தைச் செய்ய, தங்களது 15 வயது மகளை, 5 வயது சிறுவனைப் போலப் பாவித்துக் கட்டளையிடுகிறார்கள். (5)

தாய், தந்தையின் அதிகாரம் பரஸ்பரம் பிரயோகிக்கப்பட வேண்டும். அவர்கள் ஒவ்வொருவரின் அதிகாரம் அவர்களது இயல் புகளுக் கும், தன்மைகளுக்கும் ஏற்ப இருக்க வேண்டும். பெற்றோர்களின் அதிகாரத்தின் பரஸ்பர பிரயோகம் என் பது, பிள் ளைகளை வழி நடத்துவதிலும், திருத்துவதிலும், கண்டிப்பதிலும், முடிவெடுப்பதிலும் அவரவர் பங்கினை ஆற்றுவதாகும். ஒருவருடைய அதிகாரத்தை கைநெகிழ்வதோ அல்லது மற்றவருக்கு கொடுத்து விடுவதோ அல்ல, மாறாக தங்களது இயல்பான சுபாவத்தின்படி நடந்து கொள்வதாகும் *

தகப்பன் கடுமையையும் நீதியையும், தாய் இரக்கத்தையும் கருணையையும் காட்டி தங்கள் பிள்ளைகளை வழிநடத்த வேண்டும். ஆனாலும் முடிவெடுப்பதில் இருவரும் ஒருமித்திருக்க வேண்டும். இதனை பிள்ளைகள் அறியும்படி செய்யவேண்டும். அதற்கேற்ப பெற்றோர் இருவரின் தீர்மானங்கள் ஒருவர் மற்றவருடையதை ஆதரித்து தாங்குவதாகவே எப்போதும் இருக்க வேண்டும்.

(6) கிறீஸ்தவ பெற்றோரின் அதிகாரம், உண்மையின் எதார்த்தங்களைக் கொண்டதாக செலுத்தப்பட வேண்டும். குழந்தைகளின் தவறான, ஆபத்தான தீய நடத்தைகள் இன்று பல பெற்றோர்களால் பொறுத்துக்கொள்ளப்படுகிறது - கண்டுகொள்ளப்படாமல் விடப்படுகிறது. அது தவறு. பெற்றோர் இருவரும் சேர்ந்து அவைகளை கண்டித்து திருத்த வேண்டும். ”பிற பெற்றோர்கள் இத்தகைய காரணங்களை அனுமதிக்கிறார்கள் ஆனால் ஏன், என் பெற்றோர் மட்டும் மறுக்கிறார்கள்?'' என்ற தங்களது பிள்ளைகளின் முறைப்பாடுகளை நல்ல பெற்றோர் தக்க வகையில் எதிர்கொள்கிறார்கள். அவர்கள் தங்களது சொந்த அறிவையும் , அனுபவத்தையும் பயன்படுத்தி எந்த காரியம் நல்லது, எது தீமையானது என்பதை உணர்ந்து, நல்லவற்றைக்

கொள்ளவும், தீயவற்றை விட்டுவிலகும்படிச் செய்யவும், நற் புண்ணியங் களை எடுத்துக் கூறி அனுசரிக்க அறி வுறு த் தி தீ தூண் ட வேண் டும். சில எடுத்துக்காட்டுகளைக் காண்போம்:

(1) வீட்டுக்கு வெளியேயான பொழுதுபோக்கு:

பெற்றோர் தங்கள் பிள்ளைகள் தங்கள் பொழுது போக்குக்காக எங்கே செல்கிறார்கள் - யாருடன் செல்கிறார்கள் - எவ்வளவு நேரத்தை வெளியே செலவிடுகிறார்கள் - எவ்வளவு நேரம் கழித்து வீட்டிற்கு வருகிறார்கள் என்பதை அறிந்து கொண்டு அதற்கேற்ப அறிவுரைக் கூறி திருத்த வேண்டும்.

2) வீட்டில் பொழுதுபோக்கு:

பெற்றோர்கள் தங்கள் குழந்தைகளின் நண்பர்களை தங்கள் இல்லத்திற்கு வரவேற்க வேண்டும். ஏனெனில் தங்கள் பிள்ளைகள் பழகும் நண்பர்களைப் பற்றி அறிந்து கொள்ள இது ஒரு வாய்ப்பாக அமையும். இடையிடையே பெற் றோரும் , அவர்களது பொழுதுபோக்குகளில் சேர்ந்து கொள்வது நன்று.

(3) பாலுணர்வு பற்றிய போதனை:

பெற்றோர்களின் முதன்மையான பொறுப்பு என்னவெனில், தங்களது வளரும் இளம்பிராயத்துப் பிள்ளைகளுக்கு பாலுணர்வு (Sex) பற்றிய அடிப்படையான தகவல்களை கண்ணியமான முறையில் கற்பிப்பதுமல்லாமல், அந்த விஷயத்தில் அவர்களுக்கு எழும் பிரச்சினைகளை தவிர்ப்பதற்கு நல்ல முறையில் புத்தமதி கூறி அவர்களைத் தயாரிப்பதுமாகும். (காண்க: Catechese Catholique du mariage. No.307)

மேற்கூறப்பட்ட கருத்துகளின் அடிப்படையில் பெற்றோர்கள் தங்கள் குழந்தைகளைப் பற்றிய தங்களின் செயல்பாடுகளை வகுத்துக்கொள்ள வேண்டும். பின்பு எது, தங்கள் பிள்ளைகளின் நித்திய மற்றும் இவ்வுலக வாழ்வுக்கு சிறந்தது என்பதை உணர்ந்து வழிநடத்துவார்களாக!

பிள்ளைகள் குற்றம் செய்தால், பெற்றோருக்குரிய கடமை என்ன ?

““பிள்ளைகள் ஜெபம் செய்யாதிருந்தாலோ, ஞாயிறு பூசை காணத்தவறினாலோ, கெட்ட வார்த்தை சொன்னாலோ, திருடினாலோ, வேலைகளை சரியாக நிறைவேற்றாது போனாலோ, கொடுத்த கட்டளைக்கு கீழ்படியாதிருந்தாலோ, வேறு எந்தக் குற்றங்களை செய்தாலும் அவர்களைக் கண்டிக்கவும், தண்டிக்கவும் தாய் தகப்பனுக்கு கண்டிப்பான கடமை உண்டு.

சிறுவனைக் கண்டிக்க மறக்காதே. அவனை நீ பிரம்பால் அடித்தாலும் சாகமாட்டான். நீ அவனை பிரம்பால் அடிப்பாய், அவன் ஆன்மாவையும் நரகத்தினின்று இரட்சிப்பாய்.““ (பழமொழி 2 3 : 13 -14) ”சிருவனின் இருதயத்தில் மதியீனம் கட்டப்பட்டிருக்கிறது் போதக்கோலும் ஓட்டிவிடும்.’’ (பழமொழி 22 : 15) ”தன் குமாரனை நேசிக்கிறவன் ... அவனை அடிக்கடித் தண்டிக்கக் கடவான்.’’ (சர்வபிரசங்கி 2 3 : 1) - ஞானோபதேசக் கோர்வை

## 8. கத்தோலிக்கர்களின் முக்கிய கவனத்திற்கு!

1. ஆலயங்களில் உள்ளே நுழையும் முன் செருப்பை வெளியே கழட்ட வேண்டும்

2. நுழைந்ததும் மொபைல் போனை சுவிட்ச் ஆ.்.ப் ( Mobile switched off) செய்ய வேண்டும்.

3. பெண்கள் நாகரீகமான, கண்ணியமான ஆடைகள் அணிந்து ஆலயம் வர வேண்டும்.

4. மற்றவர்களின் ஒழுக்கத்தை கெடுக்கும் ஆடைகள் அணிந்து ஆலயம் வரவே கூடாது

5. பெண்கள் திருப்பலி முடியும் வரை தலைக்கு முக்காடிட வேண்டும்.

6. ஆண்களும், பெண்களும் திருப்பலி முடியும் வரை பக்கத்தில் இருப்பவர்களிடம் பேசவே கூடாது.

7. திருப்பலி பூசைக்கு முன்போ, நடுவிலோ நடனம் ஆட யார் அழைத்தாலும், தங்கள் குழந்தைகளை அதற்கு அனுமதிக்கவே கூடாது.

8. திவ்ய நற்கருணையை பக்தியோடு முழங்காலில் நின்று நாவில் வாங்க வேண்டும்.

9. நற்கருணை வாங்கிய பின்பு யார் பேசினாலும் அதைக்கவனிக்காமல் நாவில் வந்து, இதயத்தில் நுழைந்து ஆன்மாவில் தங்கும் இயேசுவோடு மட்டும்தான் ஒரு

10 நிமிடமாவது பேசவேண்டும். உறவாடவேண்டும்.

10. யார் கரவொலி எழுப்ப சொன்னாலும் கரவொலி எழுப்பக்கூடாது.

11. பாதி திருப்பலியில் நுழையவும் கூடாது் பாதி திருப்பலியில் வெளியில் செல்லவும் கூடாது.

12. சமாதானம் சொல்லும்போது வலப்பக்கமும், இடப்பக்கமும் இருப்பவரிடம் மட்டும் சொன்னால் போதும். ஆலயத்திற்கு வெளியே இருப்பவர் வரை சொல்ல வேண்டிய அவசியமும் இல்லை.

13. திருமண அறிக்கை வாசித்தவுடன் மூச்சு விடாமல் வெடி வெடிக்கத்தேவையில்லை. (திருப்பலி முடிந்தவுடன் வெடி வெடித்தால் யார் அடிக்கப்போகிறார்கள்)

14. பிரசங்கம் நடக்கும்போது இளைஞர்கள் வெளி நடப்பு செய்யக்கூடாது.

15. அன்று திருப்பலி சிறப்பிப்போர் திருப்பலியின் நடுவில் சூப்பர்வைசர் வேலை செய்யக்கூடாது.

16. வாரம் ஒருமுறையோ, மாதம் ஒருமுறையோ நல்ல பாவசங்கீர்த்தனம் செய்து திருப்பலியில் பங்கேற்க வேண்டும்.

17. திருப்பலி என்ற தெய்வீக பலியில் பங்கேற்கும் கத்தொலிக்க மக்கள் பக்தியுடன் பங்கேற்றாலே தீமைகள் குறைந்துவிடும்

18. முகத்தாட்சண்யம் பார்க்கவே கூடாது. தப்பு என்று தெறிந்தும் அது நடக்க அதை அனுமதிக்க்கூடாது. முடிந்தவரையில் முறையாக மென்மையாக பேசி அதை நிறுத்தப்பாடுபடவேண்டும்.

19. அவசங்கைகள் குறைய குறைய ஜெபமாலைகள் அதிகமாக ஜெபித்திடல் வேண்டும்

20.முக்கியமாக குடும்ப ஜெபமாலை ( வீட்டில் எத்தனைபேர் இருக்கிறீர்களோ அவர்கள்) 53 மணி ஜெபித்தே ஆகவேண்டும்.

இதுவே நம் கத்தோலிக்க திருச்சபையின் பெருமை!

